[15th November 1961

### *Sugar*

* 2086 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் புதிய சர்க்கரை ஆலைகள் ஆரம்பிக்கக்கூடாதென்று மத்திய சர்க்கார் மாநில சர்க்காருககு அறிவித்துள்ளார்களா ?

(இ) அப்படியானுல், அதற்கான காரணங்கள் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) & (இ) The present annual production of sugar in the country exceeds the demand. The disposal of the surplus production has become a problem. The Government of India have therefore decided to suspend for the present, the licensing of new sugar factories and expansion of existing ones.

**SRI S. M. ANNAMALAI :** வடநாட்டில் அதிகமான சர்க்கரை ஆலைகள் இருக்கின்றன. நமது மாநிலத்தைப் பொறுத்தவரையில் அவ்வளவு ஆலைகள் கிடையாது. இந்தக் கரும்பு ருசியாக இருப்பதனுல் இங்கேயே அதிக ஆலைகள் உண்டாகி சர்க்கரை உற்பத்தி செய்தால் இன்னும் விலை குறைவாகக்கூடக் கொடுக்கலாம் என்கிருர்கள். ஏன் அதிகம் ஏற்படுத்த முயற்சி செய்யக்கூடாது ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இதுவரையில் புதிய சர்க்கரை ஆலைகள் சில அமைக்கப்பட்டிருக்கின்றன. மேலும் ஏழு சர்க்கரை ஆலைகளை அமைக்க லைசென்ஸ் வழங்கப்பட்டிருக்கிறது. அதற்கு மேலும் வழங்குவதில்தான் சிரமம் இருக்கிறது.

SRI A. A. RASHEED : Sir, is the Hon. Minister aware that in spite of overproduction of sugar, the price of sugar has not declined in recent months and if so, will the Government insist on having more sugar factories in our State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : If there is surplus there is difficulty in disposal. That is the present position. The Government of India is trying to build up stock for exporting the sugar to other countries. We are interested in export policy and it will certainly reduce the price. Reducing the price of sugar will also involve reducing the price of sugarcane supplied to the factory. All these things are under examination.

**SRI S. M. ANNAMALAI :** புதியதாக ஏழு சர்க்கரை ஆலைகளுக்கு லைசென்சு வழங்கப்பட்டிருப்பதாக அமைச்சர் அவர்கள் சொன்னுர்கள். நம்முடைய மாநிலத்தைப் பொறுத்தவரையில் எந்த எந்த இடத்தில் அவை அமைக்கப்படும் என்று சொல்ல முடியுமா ? மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நம்முடைய சிபார்சுகள் அனைத்தும் மத்திய சர்க்காரால் ஏற்றுக்கொள்ளப்பட்டனவா ? அப்படியாயின் அதன் விவரம் என்ன ?

15th November 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நாம் சிபார்சு செய்தது எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டார்கள் என்று சொல்ல முடியாது. ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பதில் கள்ளக்குறிச்சி கூட்டுறவு சர்க்கரை ஆலை ஒன்று, சேலம் கூட்டுறவு சர்க்கரை ஆலை ஒன்று, மதுரையில் உள்ள சமயநல்லூர் சர்க்கரை ஆலை ஒன்று, கோயம்புத்தூரில் மற்றொரு கூட்டுறவு சர்க்கரை ஆலை, பிரைவேட் செக்டாரில் ஒன்று. இன்னும் லால்குடி, பெண்ணாடம், தஞ்சாவூர் இங்கெல்லாம் தனியார் துறையில் இருக்கிறது.

SRI M. K. SOMASUNDARAM : புதிதாக ஏழு சர்க்கரை ஆலைகளைத் துவக்குவதற்கு லைசென்சு வழங்கப்பட்டிருப்பதாகச் சொன்னார்கள். அதில் சர்க்கார் பங்கு எவ்வளவு ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கூட்டுறவு ஆலையாக இருந்தால் 15 லட்சம், அவர்கள் எத்தனை ஷேர் காப்பிடல் போடுகிறார்களோ அத்தனைக்கு நாம் ஷேர் எடுக்கிறோம்.

SRI V. K. KOTHANDARAMAN : வடாற்காடு ஜில்லாவில் ஆம்பூருக்கு அருகில் சர்க்கரை ஆலை ஆரம்பிக்கக்கூடிய நேரத்தில் திருவண்ணாமலையில் கூட்டுறவு ஆலை ஆரம்பிக்கவேண்டுமென்று அங்கு பங்குதாரர்களைச் சேர்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்பது தெரியுமா ? அங்கேயும் ஆரம்பிக்கும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : திருவண்ணாமலையில் வேண்டுமென்று கேட்டார்கள். கள்ளக்குறிச்சியில் வேண்டுமென்று கேட்டார்கள். இந்த இரண்டையும் பரிசீலனை செய்ததில் திருவண்ணாமலையில் கரும்பு போதுமானதாகக் கிடையாது, கள்ளக்குறிச்சியில் அதிகமாக இருந்தது. ஆகவே, கள்ளக்குறிச்சிக்கு லைசென்சு வழங்கினார்கள். திருவண்ணாமலைக்கு வழங்கவில்லை. ஆனால் நான் ஒரு யோசனை சொன்னேன். இரண்டுபேரும் சேர்ந்து ஒரே கூட்டுறவு சங்கமாக அமைத்துக்கொண்டால் திருவண்ணாமலை தாலுக்காவுக்கும், கள்ளக்குறிச்சி தாலுக்காவுக்கும் பயன் உண்டு. இதை அவர்கள் ஏற்றுக்கொண்டால் நல்ல பயன் உண்டு.

SRI P. S. ELLAPPAN : எங்களுடைய மதுராந்தகம் தாலுக்காவில் இருக்கக்கூடிய நஞ்சை நிலம் அத்தனையிலும் இப்போது கரும்பு உற்பத்தி செய்துவிட்டார்கள். இப்போதேயே ஒரு படி அரிசி ஒன்னரை ரூபாய் விற்கிறது. இப்படி நெல் விளைக்கிற பூமியில் எல்லாம் சர்க்கரை ஆலை சர்க்கரை ஆலை என்று கரும்பு போட்டுக்கொண்டே போனால் சாப்பாட்டுக்கு என்ன பண்ணுவது, இதை அமைச்சர் அவர்கள் கவனித்துப் பார்த்து பதில் சொல்ல வேண்டுமென்று கேட்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பஸ்ஸில் போகிறபோது ரோடுமேல் கரும்புப் பயிர் தெரிவதால் எங்கே பார்த்தாலும் கரும்பு பயிரிட்டுவிடுகிறார்களே என்று கனம் அங்கத்தினர் சொல்கிறார். மொத்தம் ஒரு கோடி எண்பது லட்சம் ஏக்கரா

[15th November 1961

நிலம் சாகுபடியாகிறது நம் ராஜ்யத்தில். இதிலே லட்சத்து இருபதாயிரம் ஏக்கருக்குமேல் கரும்பு சாகுபடி செய்யப்படுவதில்லை. அதில் ஒரு சிறு பகுதிதான் மதுராந்தகம் தாலூக்காவில் இருக்கிறது. மதுராந்தகம் சர்க்கரை ஆலைக்கு மதுராந்தகத்தில் மட்டும் கரும்பு போட்டுக்கொள்ளவில்லை. திண்டிவனத்தில் இருந்தும் சப்ளையாகிறது.

SRI P. S. CHINNADURAI : புதிதாக ஏற்பட இருக்கிற சர்க்கரை ஆலைகள் கூட்டுறவுத் துறையில் ஏற்படுமா அல்லது சர்க்கார் துறையில் ஏற்படுமா ? தனியார் துறையில் ஏற்படுவது எவ்வளவு ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போதுதான் அதற்குப் பதில் சொன்னேன். கனம் அங்கத்தினர் அப்போது வரவில்லை போலிருக்கிறது. சில ஆலைகள் கூட்டுறவுத் துறையில் வரும். சில தனியார் துறையில்.

* 2087 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சமீபத்தில் சர்க்கரை கட்டுப்பாடு ரத்து செய்த விஷயத்தில் மத்திய சர்க்கார் மாநில சர்க்காரை கலந்து ஆலோசித்தார்களா ?

(இ) இது விஷயமாக நமது சர்க்கார் தெரிவித்த அபிப்பிராயமென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) and (இ) The Government decline to answer this question in the public interest.

*Murder*

* 2088 *Q.*—SRI M. KALYANASUNDARAM : SRI V. K. KOTHANDARAMAN : } Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any case of murder of a worker by name Muthukrishnan within the compound of a match factory in Sivakasi was reported to the Police on 22nd June 1961 ; and

(*b*) if so, the result of the police investigation in the matter?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) According to the report of the Superintendent of Police, Ramanathapuram, this was a case of suicide by hanging by Muthukrishnan, a worker in Lakshmi Factory at Sivakasi, and not a case of murder.

* 2089 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : SRI S. M. ANNAMALAI : } கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—